


அரசு அருங்காட்சியகம், நாகப்பட்டினம்

# கையேடு

25-1-1999 அன்று நாகப்பட்டினம் அரசு அருங்காட்சியகத் தொடக்க விழாவின் போது வெளியிடப்பட்டது.

மாவட்ட அருங்காட்சியக வெளியீடு எண். 6

ஆசிரியர் குழு

**முனைவர் வே. ஜெயராஜ், ஜா. ரா. அசோகன்**
**க. சரவணன்**



அருங்காட்சியகங்களின் முதன்மை ஆணையர்

**வெளியிடுபவர் :**

**சு. ரங்கமணி, இ.ஆ.ப.,**
**அருங்காட்சியகங்களின் முதன்மை ஆணையர்,**
**அரசு அருங்காட்சியகம், சென்னை-600 008.**

ஜனவரி, 1999. விலை : ரூ. 10/-



## அரசு அருங்காட்சியகம், நாகப்பட்டினம்

# கையேடு

[25.1.1999 அன்று நாகப்பட்டினம் அரசு அருங்காட்சியகத்
தொடக்க விழாவின்போது வெளியிடப்பட்டது]

மாவட்ட அருங்காட்சியக வரிசை - வெளியீடு எண் : 6

*ஆசிரியர்கள்*

**முனைவர் வே. ஜெயராஜ்,**
**ஜா.ரா. அசோகன், க. சரவணன்**

© அருங்காட்சியகங்களின் முதன்மை ஆணையர்

*வெளியிடுபவர்*

**சு. ரங்கமணி, இ.ஆ.ப.,**
அருங்காட்சியகங்களின் முதன்மை ஆணையர்,
அரசு அருங்காட்சியகம், சென்னை-600 008.

ஜனவரி, 1999] [விலை ரூ. 10/-

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அரசு அருங்காட்சியகம், நாகப்பட்டினம் கையேடு |
| ஆசிரியர் | : | முனைவர் வே. ஜெயராஜ், ஜா.ரா. அசோகன், க. சரவணன் |
| வெளியிடுபவர் | : | அருங்காட்சியகங்களின் முதன்மை ஆணையர் |
| வெளியீட்டு எண் | : | மாவட்ட அருங்காட்சியக வெளியீடு எண். 6 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 25.1.1999 |
| தாள் | : | மேப் லித்தோ |
| நூல் அளவு | : | 21 x 14 செ.மீ. |
| பக்கங்கள் | : | 32 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 10.5 புள்ளி |
| அச்சிட்டோர் | : | ராகுல் கிராபிக்ஸ், சென்னை-8. |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | அருங்காட்சியகம் |
| விலை | : | ரூ. 10.00 |

# பொருளடக்கம்

சு. ரங்கமணி, இ.ஆ.ப.,
அருங்காட்சியகங்களின்
முதன்மை ஆணையர்

அரசு அருங்காட்சியகம்,
சென்னை-600 008.
4.1.1999

# அணிந்துரை

அரசு அருங்காட்சியகத் துறை தமிழ்நாடு முழுவதிலும் அந்தந்த மாவட்ட மக்கள், அவர்களின் கலை, பண்பாடு, அறிவியல் மற்றும் இயற்கைச் செல்வங்களை அறிந்து, மகிழ்வுற்று வருங்கால சந்ததிக்கும் பாதுகாத்து வைக்கும் பொருட்டு இதுவரை புதுக்கோட்டை, சேலம், மதுரை, திருச்சி, வேலூர், ஈரோடு, ஊட்டி, கடலூர், கோயமுத்தூர், கன்னியாகுமரி, திருநெல்வேலி, கிருட்டினகிரி, பழனி, சிவகங்கை, திருவாரூர் ஆகிய மாவட்டங்களில் பல்நோக்கு அருங்காட்சியகங்கள் அமைத்து செயல்படுத்தி வருகின்றது. 1998–99 நிதி ஆண்டில் இரண்டாம் பகுதி திட்டத்தின் கீழ் நாகப்பட்டினம் மற்றும் காஞ்சீபுரம் ஆகிய இடங்களில் மாவட்ட அருங்காட்சியகங்கள் அமைக்க அரசு ஆணை வழங்கியுள்ளதையடுத்து நாகப்பட்டினத்தில் 16வது அருங்காட்சியகம் நிறுவப்பட்டுள்ளது.

நாகப்பட்டினம், தஞ்சாவூர் மாவட்டத்திலிருந்து பிரிக்கப்பட்டு, 1991ல் இருந்து தனி மாவட்டமாக இயங்கி வருகிறது. வளர்ச்சிப் பணிகளில் இம்மாவட்டம் மிக அதிகமாக பல துறைகளில் முன்னேறி வருகிறது. மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. சிவ்தாஸ் மீனா, இ.ஆ.ப., அவர்கள் மிகுந்த முனைப்புடன் அருங்காட்சியகத்திற்கென ஒரு கட்டடத்தை தேடிக் கண்டுபிடித்துக் கொடுத்துள்ளார். அருங்காட்சியகம் சிறப்பான அரும்பொருட்களைச் சேர்த்து சிறந்த அருங்காட்சியகமாகச் செயல்பட வேண்டுமெனக் கருதி அவ்வப்போது எங்களுக்கு தெரிவித்து வருவது மிகுந்த மகிழ்ச்சிக்குரியது மட்டுமல்லாமல் அருங்காட்சியகம் சொந்த கட்டடத்தில் இயங்குவதற்கு ஒரு ஏக்கர் நிலத்தை ஒதுக்கீடு செய்து, அனைத்து நடவடிக்கைகளையும் எடுத்திருப்பது இத்துறை இன்னும் சிறப்பாக பணியாற்ற உத்வேகம் அளித்துள்ளது.

ஏறத்தாழ 400க்கு மேற்பட்ட கலை, பண்பாடு, அறிவியல் மற்றும் இயற்கை வளம் சார்ந்த பொருட்கள்,மாதிரிகள், புகைப்படங்கள் ஆகியவற்றைப் பாதுகாப்பதோடல்லாமல், கல்விப் பணியாற்றிட நாகை அருங்காட்சியம் 1999ம் ஆண்டு ஜனவரி திங்கள் முதல் வெற்றி நடை போடுகிறது.

அருங்காட்சியகத்தைக் காண வரும் ஆர்வம் மிக்கவர்கள் அனைவரும் அவற்றின் விவரங்களைப் புரிந்து கொள்ளும் வண்ணம் சிறிய கையேடு வெளியிட்டால் நலமாக இருக்குமென்று துறையின் காப்பாட்சியர்கள் கருதி, தங்களுடைய வேலைப் பளுவோடு இதையும் கூட்டிக் கொண்டு அருங்காட்சியக தொடக்க விழாவின் போதே அதை வெளியிடச் செய்திருப்பது எனக்கு பெரு மகிழ்ச்சியளிக்கிறது. இதனை வாங்கிப் படிக்கும் அனைவரும் பயனடைவதுடன் தாம் படித்த செய்தியைப் பிறர்க்கும் பறை சாற்றுவர் என்ற நம்பிக்கையிலும் இதை வெளியிடுவதில் இத்துறை சார்பாகவும் அனைத்து பணியாளர்களின் சார்பாகவும் எனது நம்பிக்கையை வெளிப்படுத்துகிறேன்.

சு. ரங்கமணி

(சு. ரங்கமணி)
முதன்மை ஆணையர்.

# ஆசிரியர்கள் உரை

'அருங்காட்சியகம்' என்பது அரும்பொருட்களைச் சேகரித்து பேணிப் பாதுகாத்து, காட்சியிலமைத்து, பொருட்கள் மீது ஆய்வுகள் மேற்கொண்டு, ஆய்வு முடிவுகளை வெளியிட்டு பணியாற்றும் இலாப நோக்கற்ற நிரந்தரமான ஒரு நிறுவனமாகும். 1951ல் தொடங்கப்பட்ட சென்னை அரசு அருங்காட்சியகம் வளர்ந்து இன்று 15 மாவட்ட அரசு அருங்காட்சியகங்களை நிறுவி பணி செய்து வருகிறது. அவ்வரிசையில் நாகப்பட்டினம் அரசு அருங்காட்சியகம் பதினாறாவது ஆகும்.

ஏறத்தாழ 400 அரும் பொருட்களுடன் நாகப்பட்டினம் அருங்காட்சியகம் 25.1.99 அன்று தொடங்கப்பட்டது. பார்வையாளர்களும் ஆய்வாளர்களும் நாகப்பட்டினம் அருங்காட்சியகத் தைப் பார்வையிட ஏதுவாகவும் மாவட்டத் தகவல்கள் சிலவற்றைத் தாங்கியும் எழுதப்பட்டுள்ளது. அருங்காட்சியகம் தொடங்கும்போதே கையேடு வெளியிடுவது இதுவே முதன்முறை. இக்கையேடு எழுதிட ஊக்கமளித்த அருங்காட்சியகங்களின் முதன்மை ஆணையர் திரு. சு. ரங்கமணி, இ.ஆ.ப., அவர்களுக்கும் இக்கையேடு எழுதுவதற்குத் தகவல்கள் வழங்கிய திரு. பா. ஜவஹர், திரு. ம.மோகன், திரு. தே. ஜவஹர் பிரசாத் ராஜ், திரு. இரா. பாலசுப்பிரமணியன், திரு. கே. சேகர், திருமதி. இரா. சாந்தி, திருமதி. ம.ந. புஷ்பா மற்றும் விளக்குநர் திரு. காளத்தி அவர்களுக்கும், புகைப்படப் பிரிவு, அச்சகப் பிரிவு, தொழில் நுட்பப் பிரிவு பணியாளர்களுக்கும் மற்றும் அமைச்சுப் பணியாளர்களுக்கும் நன்றியைத் தெரிவித்து கொள்கிறோம். வாங்கிப்படிக்கும் அனைவருக்கும் இக்கையேடு உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை.

இடம் : சென்னை–8,

தேதி : 20.1.99

ஆசிரியர்கள்

# மாவட்ட அறிமுகம்

தஞ்சாவூர் மாவட்டத்திலிருந்து 1991–ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 18 ஆம் நாள் பிரிக்கப்பட்ட நாகப்பட்டினம் காயிதே மில்லத் மாவட்டம் தற்சமயம் நாகப்பட்டினம் மாவட்டம் என்று அழைக்கப்படுகிறது. இம்மாவட்டத்தின் வடக்கில் கடலூார் மாவட்டமும் கிழக்கில் வங்காள விரிகுடாக் கடலும் மேற்கில் தஞ்சாவூர் மற்றும் திருவாரூர் மாவட்டங்களும் தெற்கில் பாக் ஜலசந்தியும் எல்லைகளாக அமைந்துள்ளன. இம்மாவட்டத்தின் தலை நகர் நாகப்பட்டினம், நாகப்பட்டினம், மயிலாடுதுறை, தரங்கம்பாடி, சீர்காழி, வேதாரண்யம், திருக்குவளை, கீழ்வேளூர் ஆகிய ஏழு வட்டங்களை உள்ளடக்கிய இம்மாவட்டம் 13,77,601 மக்கள் தொகையும் (ஆண்கள் 6,81,123; பெண்கள் 6,86,478) 2,614,33 சதுர கிலோ மீட்டர் பரப்பளவும் கொண்டது. இம்மாவட்டம் மயிலாடுதுறை, நாகப்பட்டினம் ஆகிய பாராளுமன்றத் தொகுதிகளையும் சீர்காழி, பூம்புகார், மயிலாடுதுறை, நாகபட்டினம், குத்தாலம், வேதாரண்யம் ஆகிய சட்ட மன்றத் தொகுதிகளையும் உள்ளடக்கி உள்ளது.

நீர்ப்பெயற்று பதரி திபடா, நிகமா, நாகானணம், நாகர்பட்டினம் என்னும் பல்வேறு பெயர்களைப் பெற்று இன்று நாகபட்டினம் என்னும் பெயருடன் விளங்கும் கடற்கரை நகர் நாகப்பட்டினம் என பொதுவாக அழைக்கப்படுகிறது.

## சங்க காலத்தில் நாகப்பட்டினம்

பட்டினப்பாலை, பெரும்பாணாற்றுப் படை, மணிமேகலை, சிலப்பதிகாரம், புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய இலக்கியங்கள் பூம்புகார் பற்றி விரிவாகக் கூறுகின்றன. பட்டினம் எனும் சொல் காவிரிப்பூம்பட்டினத்தைக் குறிக்கும். நாகை காரோணம் பாடல் பெற்ற தலமாகும்.

## இயற்கை வளம்

இம்மாவட்டத்தை காவிரி பாய்ந்து வளமாக்குகிறது. வெண்ணாறு, வெட்டாறு, மஞ்சள் ஆறு, உப்பண ஆறு, அரிச்சந்திர ஆறு ஆகியவை கிளை நதிகளாகும். இம்மாவட்டச் சராசரி மழை அளவு 12.29 மில்லி மீட்டர் ஆகும். இம்மாவட்டத்தில் சதுப்பு நிலக் காடுகள் 25 விழுக்காடும் உலர் பசுமை நிறக்காடுகள் 68 விழுக்காடும், முட்கள் உள்ள காடுகள் 7 விழுக்காடும் உள்ளன.

தேக்கு, மூங்கில், சிசுபாபூல், யூகலிப்டஸ், முந்திரி போன்ற மரங்கள் வளர்கின்றன. கோடியக்கரையில் அதிக அளவில் காடுகள் உள்ளன. மக்கள் நெல் பயிர்த் தொழில் செய்கின்றனர். அரிசி, கோதுமை, கேழ்வரகு மக்கள் சாப்பிடும் உணவாகும். படிவுப்பாறைகள் அதிகம் காணப்படுகின்றன. வேதாரண்யம் வட்டத்தில் வண்டுவான்சேரி, வடமழை ஆகிய இடங்களில் சிலிக்கா கிடைக்கின்றது. இம்மாவட்டத்தில் மலைப்பகுதி இல்லை. லிக்னைட் கற்கள் மயிலாடுதுறையில் உள்ள திருமங்கலம் பகுதியில் கிடைக்கின்றன. நரிமணத்தில் இயற்கை வாயு கிடைக்கிறது.

## வரலாற்றில் நாகப்பட்டினம்

பழங்காலத் தொட்டே நாகப்பட்டினம் இந்தியாவின் கிழக்குக் கடற்கரைப் பகுதியின் சிறந்த ஒரு துறைமுகமாக விளங்கி இருக்கிறது.

கி.பி. 119 – 161ல் தாலமி என்ற ரோம நாட்டு நிலவியில் வல்லுநரின் பயண நூல் நாகப்பட்டினத்தைப் பற்றி குறிப்பிடுகிறது. நாகப்பட்டினத்தை தாலமி "நிகமா" என்றும், இட்சிங் "நாகவதனா" என்றும், மார்கோபோலோ "படன்" என்றும் அழைத்ததாக வரலாறு கூறும். நாகப்பட்டினம் பௌத்த சமய தலைமை இடமாக விளங்கி இருப்பது இங்கு கிடைத்துள்ள புதையல்கள், கல்வெட்டுகள் வழி அறிய முடிகிறது. நாகர் பட்டினம் மருவி நாகப்பட்டினம் என்று அழைக்கப்படுகிறது என்பாரும் உண்டு. நாகபட்டினம் என்றுதான் அழைக்க வேண்டும் எனக்கூறுவாறும் உண்டு.

கி.பி. 9ம் நூற்றாண்டில் பௌத்த மதம் சிறப்புற்றிருந்தமை கிடைத்த 9–ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பௌத்த படிமங்களிலிருந்து அறியப்படுகின்றது. கி.பி. 1500 முதல் 1658 வரை நாகப்பட்டினம் போர்ச்சுகீசியர் வசம் இருந்தது. 1658 முதல் 1834 வரை டச்சுகாரர்களின் ஆதிக்கத்தில் இருந்தது. சிறிது காலம் மைசூர் சுல்தான் ஹைதர் அலி வசம் இருந்த இப்பகுதி 1882–ல் ஆங்கிலேயர் வசம் வந்தது. 1845 முதல் நாகப்பட்டினம் பிரிட்டீசு இந்திய மாவட்ட ஆட்சியரின் தலைமையிடமாகச் செயல்பட்டது. தஞ்சாவூர், திருவாரூர், நாகப்பட்டினம் ஒரே மாவட்டமாக இருந்த போது நாகப்பட்டினம் வட்டத் தலைமையிடமாக இருந்து 1991 முதல் மாவட்டத் தலை நகரமாக இயங்கி வருகிறது.

## கல்வெட்டுச் செய்திகள்

கி.பி. 1476–ஆம் ஆண்டை ச் சார்ந்த "கல்யாணி" கல்வெட்டு ஒன்றில் பர்மாவுக்கும் இலங்கைக்கும் இடையில் செல்லும் கப்பல்கள் நாகப்பட்டினம் கடல் மார்க்கமாகச் சென்றுள்ளச் செய்தியை அறிய முடிகிறது. இக்கல்வெட்டு நாகப்பட்டினத்தை "நவுத பத்தணா" என்று குறிப்பிடுகிறது. நாகூர் தர்காவில் உள்ள கல்வெட்டு மராட்டிய மன்னன் பிரதாப சிம்மன் கோபுரம் கட்டியதைக் குறிப்பிடுகிறது.

## செப்பேடுகள்

ஆனைமங்கலம் செப்பேடு (கி.பி. 1606) இராசராசன் நாகையில் எழுப்பிய *சூளாமணி வர்ம விகாரைக்கு* ஆனைமங்கலம் என்ற ஊரைப் பள்ளிச் சந்தமாக வழங்கியதைத் தெரிவிக்கிறது. இது லெய்டன் செப்பேடுகள் என்று அழைக்கப்படுகிறது. இவற்றில் பெரியச் செப்பேடுகள் தொகுதியில் 21 பக்கங்களும் சிறிய தொகுதியில் மூன்று பக்கங்களும் உள்ளன. இவை ஹாலந்திலுள்ள லெய்டன் பல்கலைக் கழக அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

இச்செப்பேடுகளின் முதல் ஏட்டில் முதல் பக்கத்தில் உள்ள தமிழ் வாசகமும், இரண்டாம் பக்கத்தில் உள்ள தமிழ் வாசகமும் கீழே தரப்பட்டுள்ளன.



லெய்டன் செப்பேடு

4. நமக்கு யாண்டு இருபத்தொன்றாவது நாள் தொண்ணூற்றிண்டினால்

5. தஞ்சாவூர் -ப்புறம்பாடி மாளிகை ராஜாஸ்ரயனில் தெற்கில் மண்டபத்

6. து நாம் இருக்கக் கிடாரத்திரையன் சூளாமணியன்மன் க்ஷத்ரியசிகா

7. மணி வளநாட்டுப் பட்டனக்கூற்றத்து நாகப்பட்டனத்து எடுப்பிக்கின்ற சூளா

8. மணி பன்ம விஹாரத்துப் பள்ளிக்கு வேண்டும் நிவந்தத்துக்கு க்ஷத்ரி(ய) சிகாமணிவ -

9. ளநாட்டுப் பட்டனக் கூற்றத்து ஆனைமங்கலம் பள்ளிச்சந்தம் இறங்களுள்பட அழ -

10. ண்டபடி நிங்கல் நீக்கி நிலன் தொண்ணூற்றேழே இரண்டு மா முக்காணிய - ரைக்கா.

11. ணி முந்திரிகை - க்கீழ் மூன்று மா முக்கனி முந்திரிகைக் கீழ் அரையேயிரண்-

12. டு மாவினால் இறை கட்டின காணிக்கடன் நெல்லு எண்ணாயிரத்து தொள்ளாயி

13. ரத்து நாற்பத்து முக் காலணேயிறு துணிக்குற்றுணி ஒரு நாழியும் கடாரத்திரையன்

14. க்ஷத்ரிய சிகாமணி வளநாட்டுப் பட்டணக்கூற்றத்து நாகப்பட்டணத் தே எடுப்பிக்

15. கின்ற சூளாமணிபன்ம விஹாரத்துப் பள்ளிக்கு இருப்படாக யாண்டு இருபத்

16. தொன்றாவது முதல் பள்ளிச்சந்தையினரையிழியாக வரையிலித்துக் குடுக்க

17. வென்று நாம் சொல்ல நம் ஓலை எழுதும் நித்தவிநோத வளநாட்டு ஆ

18. வூர்க் கூற்றத்து விழாத்தூர் கிழவன் அமுதன் தீர்த்தக்காரன் எழுத்தினாலும் நம் ஓ

19. லை நாயகன் உய்யகொண்டார் வளநாட்டு வெண்ணாட்டுக் கேரளாந்த (க) ச்சதுர்வே

20. திமங்கலத்து கிருஷ்ணன் இராமணான மும்ம டிசோழ பிரம்மமாஹாராயனும் நித்த

கி.பி. 1600 முதல் 1630 வரை சோழ நாட்டை ஆண்ட விஜயரகுநாத நாயக்கர் டச்சு கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கு தரங்கம்பாடியில் வணிகத்தளம் அமைக்க கி.பி. 1620ல் அனுமதி அளித்தார். அதனைத் தொடர்ந்து தரங்கம்பாடியில் கட்டடங்களும் கோட்டையும் வாணிபக் கிடங்குகளும் டச்சு மரபுப்படி கட்டப்பட்டன. படேவியாவில் உள்ள வெள்ளிப்பட்டயம் ஏகோசி டச்சுக்காரர்களுக்கு நாகப்பட்டினம் மற்றும் அதைச் சூழ்ந்த 10 ஊர்களை குத்தகைக்கு விட்டதைக் குறிக்கிறது.

## புதைப் பொருட்கள்

பூம்புகாரில் நடைபெற்ற அகழ்வுகள் வழி உறைக்கிணறுகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. கீழையூர் பகுதியில் கட்டடங்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. சலவைக்கல் புத்த பாதங்கள் கிடைத்துள்ளன. கடல் பகுதியில் அமிழ்ந்த கப்பல் பகுதியும் ஈயபாளங்களும் கிடைத்துள்ளன.

நாகப்பட்டினம் மாவட்டம் பல்வேறு அரும், பெரும் புதையல் பொருட்களை வெளிக் கொண்டு வந்துள்ளது. அவைகளில் குறிப்பிடத்தக்கவை, நாகப்பட்டினத்தில் கி.பி. 1856ல் கிடைத்த மஹாயானப் பிரிவைச் சார்ந்த பௌத்தப் படிமங்கள், சீர்காழி வட்டத்தைச் சார்ந்த திருவெண்காடு அர்த்த நாரீசுவரர் (கி.பி. 11–ஆம் நூற்றாண்டு) மற்றும் லெய்டன் செப்பேடுகள் ஆகும். இம்மாவட்டத்திலிருந்து இதுவரை ஏறத்தாழ நானூறு சைவ, வைணவ, பௌத்தப் படிமங்கள் புதையலாகக் கிடைத்துள்ளன.

சோழர் கால செப்பு நாணயங்கள், சேதுபதி செப்பு நாணயங்கள், டச்சுக் காசுகள், நாயக்கர் காசுகள் மற்றும் ஆபரணங்களும் கிடைத்துள்ளன. வேதாரண்யம், மயிலாடுதுறை ஆகிய இடங்களி லிருந்து தென்னிந்தியப் பணங்களும் (தங்கம்), மயிலாடுதுறையிலிருந்து இந்தோ டச்சு, இந்தோ டேனிசு, இந்தோ பிரஞ்சு, ஆங்கிலேய இந்திய நாணயங்களும், தரங்கப்பாடி, செட்டிபுலம், மயிலாடுதுறை ஆகிய இடங்களிலிருந்து இராசராசசோழர் செப்பு நாணயங்களும் கிடைக்கப் பட்டு, அவை சென்னை அரசு அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.


சோழர் கால செப்பு நாணயம்


சேதுபதி செப்பு நாணயம்

## நினைவுச் சின்னங்கள்

புதுவெளிக் கோபுரம் என்பது அகநகரின் வெளியிடத்தில் அமைந்த புத்த சமயக் கோபுரம் இரண்டாம் நரசிம்மரால் கி.பி. 716ல் கட்டப்பட்டது. திருக்குவளை, நாகை ஆகிய இடங்களிலுள்ள சோழர் காலத்து கோயில்கள் பிரபலமானவை. பூம்புகார், வேதாரண்யம், சீர்காழி போன்ற இடங்கள் வரலாற்றுச் சிறப்புப் பெற்றவை. 18–ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட தரங்கம்பாடி தூயபேதுரு தேவாலயம், ஹாலந்து பங்களா போன்றவையும், தரங்கம்பாடிக் கோட்டையும் டச்சு காரர்களின் அன்பளிப்பாகும். பூம்புகாரில் சிலப்பதிகாரக் கலைக்கூடம், இலஞ்சி மண்டபம், பாவை மண்டபம், நெடுங்கல் மண்டபம், கொற்றப்பந்தல் போன்றவை நினைவுச் சின்னங்களாகத் தமிழ்நாடு அரசால் கட்டப்பட்டுள்ளன.

## நாகை மாவட்ட சிறந்த கோயில்கள்

அருள்மிகு சட்டநாத சுவாமி திருக்கோயில் – சீர்காழி; அருள்மிகு வைத்தியநாத சுவாமி திருக்கோயில் – வைத்தீஸ்வரன் திருக்கோயில் ; அருள்மிகு சுவேதாரண்யேஸ்வர சுவாமி திருக்கோயில் – திருவெண்காடு ; அருள்மிகு அமிர்தகடேஸ்வர சுவாமி திருக்கோயில் – திருக்கடையூர் ; அருள்மிகு நவநீதேஸ்வரர் திருக்கோயில் – சிக்கல் (சிக்கல் சிங்கார வேலர்) ; அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் – எட்டுக்குடி ; அருள்மிகு வேதாரண்யேஸ்வரர் திருக்கோயில் – வேதாரண்யம் ; அருள்மிகு சௌந்திர ராசப்பெருமாள் திருக்கோயில் – நாகப்பட்டினம் ; அருள்மிகு காயாரோகண சுவாமி மற்றும் நீலாதாட்சியம்மன் திருக்கோயில் – நாகப்பட்டினம் ; அருள்மிகு தியாகராஜப் பெருமாள் திருக்கோயில் – திருக்குவளை போன்ற சிறந்த கோயில்கள் ஆகும்.



சட்டநாதர் சுவாமி
திருக்கோயில் - சீர்காழி



சிக்கல் சிங்காரவேலர்
திருக்கோயில் - சிக்கல்

## பள்ளி வாசல்


நாகூர் தர்க்கா - உள் தோற்றம்

ஹசரத் சையது சாகுல் ஹமீது குவாதிர் அலிகஞ்ச பாய் என்ற முகமதியப் பெரியவரை நாகூர் மக்கள் *"நாகூர் ஆண்டவர்"* என நம்புகின்றனர். அவரைப் புதைத்த இடம் *"நாகூர் தர்க்கா"* என்று அழைக்கப் படுகிறது. இதனை ஒட்டி பள்ளி வாசலும் உள்ளது. இது ஏறத்தாழ 16–ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட அழகிய வேலைப்பாடுடைய தர்க்கா ஆகும். இங்கு இவரின் பிறந்த நாள் மற்றும் இறந்த நாளை *"கந்தூரி"* விழாக்களாக 10 நாட்கள் மிகச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்.

## கலை வளர்ச்சி

இம்மாவட்டம் பல்வேறு சாலைகளைப் பேணிப் பாதுகாத்து வருகிறது. ஓவியம், சிற்பம், கட்டடம், இசை, அச்சு ஆகிய கலைகள் சிறந்து விளங்கியமை இம்மாவட்டத்தில் இன்றும் கிடைக்கிற பண்பாட்டு எச்சங்களிலிருந்து அறியலாம்.

## ஓவியக்கலை

இம்மாவட்டத்தில் பல்வேறு கோயில்களில் சுவரோவியங்கள் காணப் படுகின்றன. வேதாரண்யத்திலுள்ள கோயிலில் பல்வேறு புராணக் காட்சிகள் சுவரோவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன.


நடராசர் சுவரோவியம் - வேதாரண்யம்

## இசை

இசைத் துறையில் வல்லவர் களாகிய தவுல் வித்துவான்கள் திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளை மற்றும் திரு. சண்முகவடிவேல் ஆகியவர்களின் சொந்த ஊர் நீடாமங்கலமாகும். தவுல் இசைமேதைகளான திரு. சண்முகசுந்தரம் மற்றும் திரு. சவுந்தரராஜன் வலங்கை

மானில் பிறந்தவர்கள். சீர்காழி எஸ். கோவிந்தராஜன் சீர்காழியில் பிறந்த இசைக் கலைஞராவர்.

## கட்டடக் கலை

இம்மாவட்டத்தில் சோழர் காலக் கட்டடங்கள் பல உள்ளன. இவை திராவிடர் கட்டட கலைப் பாணியை இன்றும் உணர்த்தி நிற்கின்றன. 11–ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இராசராசப் பெரும்பள்ளி மற்றும் இராசேந்திர சோழப் பெரும்பள்ளி ஆகிய இடங்களில் இரண்டு பௌத்த கோயில்கள் கட்டப்பட்டன. டேனிசு வர்த்தகக் கம்பெனியின் கப்பற்படைத் தளபதி ஒவ் ஜெட்டி என்பவர் கி.பி. 1620ல் தரங்கம்பாடிக் கோட்டையை நிறுவினார். டச்சுக்காரர்களின் கட்டடங்கள் பல இன்றும் அவர்களது மரபைத் தாங்கி நின்று அவர்களது கலைத் தொண்டை உணர்த்துகின்றன. ஸ்ரீ விஜயபத்தைச் சார்ந்த ஸ்ரீமாரவிஜயோத்துங்க வர்மன் என்னும் மன்னன் நாகப்பட்டினத்தில் ஒரு புத்த விஹாரத்தைக் கட்டி, தனது தகப்பனார் பெயரைச்சூட்டி அதனை "சூடாமணி வர்ம விஹாரம்" எனப் பெயர் சூட்டினார் எனச் சோழ மாமன்னன் இராசராசனின் பெரிய லெய்டன் செப்பேடு தெரிவிக்கிறது. நாகூர் தர்ஹா செங்கற்களாலும், சுண்ணாம்பாலும், கட்டப்பட்ட வெள்ளை நிறமான கட்டடம் ஆகும். 5 கோபுரங்கள் உள்ளன. அதிக உயரம் 90 அடியாகும். வேளாங் கண்ணி கிறித்தவக் கோயில் ஒரு போர்ச்சுகீசிய வியாபாரியால் கட்டப்பட்டதாகக் கருதப் படுகிறது.



வேளாங்கண்ணி மாதா கோயில்

## அச்சுக்கலை

தரங்கம்பாடியில் அச்சு நூல்கள் வெளியிடப்பட்டன. கி.பி. 1706–ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் ஏழாம் நாள் டென்மார்க் அரசர் நான்காம் பிரடரிக்கால் அனுப்பப்பட்ட பர்தலோமேயஸ் சீகன்பால்கு ஹென்றி புளுட்சௌ பாதிரியார் தரங்கம்பாடி வந்தடைந்தார். கி.பி. 1713–ஆம் ஆண்டில் தரங்கம்பாடியில் அச்சகம் ஒன்றை நிறுவி நூல்கள் தமிழில் வெளியிட்டார். தமிழைக் கற்ற இவர் பைபிளின் புதிய ஏற்பாட்டினைத் தமிழில் மொழி பெயர்த்தார். அந்நூல் "அஞ்சு வேத பொஷ்தகம்" என்ற பெயரில் தரங்கம்பாடி பாதிரிமார் அச்சுக் கூடத்தில் அச்சாயிற்று.

## சிற்பக்கலை



தட்சிணாமூர்த்தி-
திருத்துறைப்பூண்டி
கி.பி. 18-ம் நூற்றாண்டு

படிமக் கலையும் சிற்பக்கலையும் இம்மாவட்டத்தில் சிறந்து விளங்கியமை இம்மாவட்டத்தில் கிடைத்த படிமங்களின் வாயிலாக அறிய முடிகிறது. கட்டி வார்ப்பு முறையும், வெற்றிட வார்ப்பு முறையும் பின்பற்றப்பட்டமை சிற்பங்கள் வழி அறிய முடிகிறது. புதையலாகக் கிடைத்த வெங்கலச் சிற்பங்கள் பெரும்பாலும் சென்னை அருங்காட்சியகத்தில் காட்சியில் உள்ளன. ஏறத்தாழ 400 படிமங்கள் இம்மாவட்டத்திலிருந்து பெறப்பட்டுள்ளன. திருத்துறைப்பூண்டியிலிருந்து தட்சிணாமூர்த்தி என்ற கற்சிற்பம் பெறப்பட்டுள்ளது. பல்வேறு கற்சிற்பங்கள் மாவட்ட ஆட்சித் தலைவரால் இனங்கண்டுக்கொள்ளப்பட்டு அரசு அருங்காட்சியகத்திற்கு ஒப்படைக்கப்பட உள்ளன.

## கல்வி வளர்ச்சி

கல்வி வளர்ச்சியில் இம்மாவட்டம் சிறந்த நிலை வகித்து வந்துள்ளது. மறைமலையடிகள், திரு.வி.க., மாயூரம் வேதநாயகம் பிள்ளை, கல்கி (கிருஷ்ணமூர்த்தி), வடுவூர் துரைசாமி ஐயங்கார், தி. ஜானகிராமன், கரிச்சான் குஞ்சு, குடந்தை சுந்தரேசனார், கலைஞர் மு. கருணாநிதி, திருவாரூர் தங்கராசு ஆகியோர் அம்மண்ணின் தன்னிகரற்ற இலக்கிய மைந்தர் ஆவர். சங்கத் தமிழ், குரளோவியம் ஆகியன சிறந்த இலக்கிய படைப்புகள் ஆகும். இம்மாவட்டத்தில் ஒரு மாவட்ட மைய நூலகமும், 37 கிளை நூலகங்களும், 5 ஊர்ப்புற நூலகங்களும் 17 பகுதி நேர நூலகங்களும் அமைந்துள்ளன. மயிலாடுதுறையில் அன்பநாதபுரம் வகையறா அறநிலையக் கல்லூரி, அதிராமப்பட்டினம் காதீர் முகைதீன் தனியார் கலைக் கல்லூரி, பூம்புகார் கலைக் கல்லூரி பொறையாறு லுத்தரன் கல்லூரி போன்ற 7 கலைக் கல்லூரிகளும் 3 தொழிற் கல்லூரிகளும், தரங்கம்பாடியில் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியும், 55 மேல் நிலைப்பள்ளிகளும் 1126 தொடக்க, நடுநிலைப் பள்ளிகளும் கல்விப் பணியாற்றி வருகின்றன.


மறைமலை அடிகள்

மறைமலையடிகள் (கி.பி. 1876 – 1950) *திருவள்ளுவர் ஆண்டினைக் கண்டு* உலகிற்கு வழங்கினார். புலவர் சீ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை (கி.பி. 1815–1876) நாகை புராணம் பாடியவர். நாவலர் குலாம் காதிரு புலவர் (கி.பி. 1833–1908) 24 நூல்கள் எழுதியுள்ளார். அவற்றுள் *"பொருத்த இலக்கணம்"*, *"நாகூர் ஆண்டவர் வரலாறு"* ஆகியவை குறிப்பிடத்தக்கவை. திரு. இராசகோபாலன் பிள்ளை *"எமவாதம்"* என்ற நூலை எழுதினார்.

## தொழில் வளர்ச்சி

இம்மாவட்டத்தின் சிறப்புத் தொழில் விவசாயம் ஆகும். எனவே, விவசாயம் தொடர்பான தொழிற்சாலைகள் பல அமைந்துள்ளன. 74 தொழிற்சாலைகளும் மூன்று இடங்களில் சர்க்கரை ஆலைகளும் உள்ளன. வேதாரண்யம், கோடியக்கரை, அதிராமப்பட்டினம், தம்பிக்கோட்டை ஆகிய இடங்களில் உப்பு தயாரிக்கும் தொழில் நடைபெறுகிறது. மெழுகு, சோப்பு மற்றும் பித்தளைப் பாத்திரங்கள் செய்யும் தொழிற்சாலைகளும் உள்ளன.

மயிலாடுதுறை பட்டு நெசவிற்கு பெயர் பெற்ற இடமாகும். வேதாரண்யம் புகையிலைத் தயாரிப்பிற்குப் பெயர் பெற்ற இடம். மயிலாடுதுறையில் காகிதம் தயாரிக்கும் தொழிற்சாலையும் உள்ளது. இந்தியாவில் முதல் முதலில் காகிதத் தொழிற்சாலை தரங்கம்பாடியில் நிறுவப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இங்கு பிடிக்கப்படும் மீன்கள் அமெரிக்கா, பிரான்சு, ஜப்பான் ஆகிய நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. நரிமணம் பகுதியில் இயற்கை எரிவாயு எடுக்கப்படுகிறது. வேங்கடங்கால் என்னுமிடத்தில் எண்ணெய் தூய்மை செய்யும் நிலையம் உள்ளது.

## விழாக்கள்

இம்மாவட்டத்தில் இந்துக்கள், முகமதியர்கள், கிறித்தவர்கள் அதிக அளவிலும், சமணர்கள், சீக்கியர்கள், பௌத்தவர்கள் சொற்பமாகவும் வாழ்ந்து வருகின்றனர். இந்துக்கள் பல்வேறு விழாக்களைக் கொண்டாடுகிறார்கள். முகமதியர்களின் *"கந்தூரி விழா"* கிறித்தவர்களின் அன்னை வேளாங்கண்ணி மாதா கோயில் விழாக்கள் ஆண்டுதோறும் சீரும் சிறப்புமாக நடைபெறுகின்றன. இவ்விழாக்களில் பல்வேறு மதத்தைச் சார்ந்தவர்களும் பங்கேற்பது போற்றுவதற்குரியதாகும்.

## விடுதலை வேள்வியில் நாகப்பட்டினம்

*1930*–ஆம் ஆண்டு மார்ச் திங்கள் மூதறிஞர் இராஜாஜி மற்றும் சர்தார் வேதரத்தினம் பிள்ளை ஆகியோரின் தலைமையில் வேதாரண்யத்தில் உப்பு சத்தியாகிரகப்போர் நடந்தது. *"ஹோம் ரூல் இயக்க"*த்தை ஆரம்பித்த பி. வரதராஜுலு நாயுடு இம்மாவட்டத்தைச் சார்ந்தவர்.

## மண்ணின் மைந்தர்கள்

தாயுமானவர் (வேதாரண்யம்), நாகை வேதாச்சலம் எனும் மறைமலையடிகள் (நாகை), தில்லையாடி வள்ளியம்மை பிறந்தது இம்மாவட்டம் ஆகும். கோரக்கச்சித்தர் (தெற்கு பொய்கை நல்லூர்) பரஞ்சோதி முனிவர் (வேதாரண்யம்), சர்தார் வேதரத்தினம் பிள்ளை (வேதாரண்யம்), நாவலர் குலாம் காதிர் (நாகூர்), கலைஞர் மு. கருணாநிதி ஆகியோர் பிரசித்தி பெற்ற இம்மாவட்டத்து மைந்தராவர்.

## சுற்றுலாத் தலங்கள்

நாகூர் தர்க்கா, 1565ல் டச்சுக்காரர்களால் கட்டப்பட்ட வேளாங் கண்ணி மாதா கோயில், பூம்புகார், தரங்கம்பாடிக் கோட்டை ஆகிய இடங் கள் சிறந்த சுற்றுலாத் தலங்களாக இன்றும் விளங்குகின்றன.



டச்சுக் கோட்டை - தரங்கம்பாடி

காவிரியின் வடகரையில் உள்ள வள்ளலார் கோயில், விசுவநாதர் கோயில், மாயூரநாதர் கோவில் சிறந்த புண்ணியத் தலங்கள் ஆகும். நாகை கவர்னராக இருந்த டச்சுக்காரர் நாகூர் ஆண்டவர் நினைவாகக் கட்டிய "பீர் மண்டபம்" நாகூரில் உள்ளது. தரங்கம்பாடி கோட்டையில்



பூம்புகார் கலைக்கூடம்

ஒரு அகழ் வைப்பகம் உள்ளது. இங்கு பீரங்கிகள், இரும்பு போர்க்கருவிகள், டச்சுக்காசுகள் போன்றவை இடம் பெற்றுள்ளன. “பூம்புகார்” சுற்றுலாத்துறையினரால் பராமரிக்கப்பட்டு வருகிறது.

## சரணாலயங்கள்

நாகையிலிருந்து 68 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள வேதாரண்யம் பகுதியில் உள்ள கோடியக்கரை விலங்குகள் மற்றும் பறவைகளின் சரணாலயமாகும். இங்கு கூழைக்கடா, நீர்காகம், கொக்கு இனங்கள், பவளக்கால் நாரை, சிறகி போன்ற பறவைகள் சைபீரியா மற்றும் ஐரோப்பா போன்ற நாடுகளிலிருந்து குளிர் காலத்தில் வந்து கூடுகள் அமைத்து இனப்பெருக்கம் செய்து கோடைக் காலத்தில் தங்கள் சொந்தப் பகுதிகளுக்குச் செல்கின்றன. இச்சரணாலயம் பரப்பளவு 17 சதுர கிலோ மீட்டர் ஆகும்.

# அரசு அருங்காட்சியகம்

தமிழ்நாடு அரசின் அருங்காட்சியகத்துறை மாவட்டங்கள் தோறும் அருங்காட்சியகங்கள் அமைத்து வருகிறது. புதுக்கோட்டை, சேலம், மதுரை, திருச்சி, வேலூர், ஈரோடு, ஊட்டி, கடலூர், கோயம்புத்தூர், திருநெல்வேலி, கன்னியாகுமரி, கிருட்டினகிரி, பழனி, சிவகங்கை, திருவாரூர் ஆகிய மாவட்ட அருங்காட்சியகங்கள் பல்நோக்கு அருங்காட்சியகங்களாகச் செயல்பட்டு வருகின்றன. அவ்வரிசையில் நாகப்பட்டினம் அரசு அருங்காட்சியகம் பதினாறாவது ஆகும்.

## நோக்கம்

மாவட்டத்தின் கலை, பண்பாடு, அறிவியல், இயற்கைவளம் தொடர்பான பொருட்களைச் சேகரித்துப் பேணி, காட்சியிலமைத்து பார்வையாளர்களுக்கு அறிவூட்டும் ஒரு சார்புக்கல்வி நிறுவனமே அருங்காட்சியகம். இதனோடு நின்று விடாமல் பல்வேறு நிகழ்ச்சிகள் வழி கல்வித் தொண்டாற்றுவதே அருங்காட்சியகத்தின் நோக்கமாகும்.

## காட்சிக் கூடங்கள்

மாவட்ட அருங்காட்சியகம் நாகபட்டினத்தில், 35, முதல் வரிசைக் கடற்கரைச் சாலையிலுள்ள கட்டடத்தின் தரைத்தளத்தில் அமைக்கப் பட்டுள்ளது. இது ஓர் பல் நோக்கு அருங்காட்சியகமாகையால் மாவட்டத்தின் முக்கிய இடங்கள், தொடர்பான புகைப்படங்கள், தொல்லியல், மானிடவியல், கலை, நாணய வியல், விலங்கியல், தாவர வியல், புவியியல், வேதியியல் தொடர்பான காட்சிப் பொருட் கள், புகைப் படங்கள் தொல் பொருள் பிரிவின் கீழ் படி மங்கள், உலோகப்பொருட்கள், கற்சிற்பங்கள், மரச்சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன.



அரசு அருங்காட்சியகம், நாகை

# தொல்பொருளியல் பிரிவு

நாகப்பட்டினத்தில் சமய வரலாற்றில் இந்து சமயமே குறிப்பாக வைணவ சமயமே தொடர்ந்து சிறப்புற்றிருந்தது. மக்கள் திருமாலையும். வைணவ ஆழ்வார்களையும் வழங்கினர். திருமங்கை ஆழ்வார் இங்கிருந்த மிகவும் வரலாற்றுப் புகழ் வாய்ந்த சூடாமணி வர்ம விஹாரத்திலிருந்து பொன்னாலான புத்தர் படிமத்தைக் களவாடினார் என்னும் வரலாற்றுக் குறிப்பு குறிப்பிடத்தக்கது. படிமங்கள் கட்டி வார்ப்பு முறையிலும் வெற்றிட வார்ப்பு முறையிலும் வார்க்கப்பட்டுள்ளன. இம்மாவட்டத்திலிருந்து இது காறும் ஏறத்தாழ நானூற்று இருபது சைவ, வைணவ, பௌத்த படிமங்கள் புதைபொருட்களாக சென்னை அரசு அருங்காட்சியகத்தில் பெறப்பட்டு பாதுகாக்கப்பட்டுள்ளன. இவற்றுள் குறிப்பிடத்தகவை சீர்காழி வட்டம் திருவெண்காடு அர்த்த நாரீஸ்வரர் மற்றும் சண்டிகேசுவரர் (கி.பி. 11–ஆம் நூற்றாண்டு), வேதாரண்யத்தைச் சேர்ந்த நடராசர் (கி.பி. 10–ஆம் நூற்றாண்டு), மற்றும் நாகப்பட்டினத்தைச் சார்ந்த பௌத்த படிமங்கள் ஆகும்.

இங்கு உடையார் கோயில்பட்டு ஊரிலிருந்து பெறப்பட்ட உமாசகிதர் (கி.பி.12நூ.), திருஞானசம்பந்தர் (கி.பி.12நூ.), பார்வதி (கி.பி.12நூ.), நடராசர் (கி.பி.12நூ.) ஆகிய நான்கு படிமங்களும் கடுவான்குடியிலிருந்து புதையலாகப் பெறப்பட்ட சோமாசுகந்தர் (கி.பி. 12நூ.), பார்வதி (கி.பி. 12நூ.), கணேசர் (கி.பி.13நூ.), பார்வதி (கி.பி.12நூ.) ஆகிய நான்கு படிமங்களும், சீர்காழியைச் சார்ந்த கணேசர் (கி.பி. 17நூ.), தவழும் கண்ணன் (கி.பி. 17நூ.), பாண்டுரங்கன் (கி.பி.17நூ.), ருக்மணி (கி.பி.17நூ.), அனுமன் (கி.பி. 17நூ.), கருடன் (கி.பி. 17நூ.), விஷ்ணு (கி.பி. 14நூ.), வேணு கோபாலர் (கி.பி.14நூ.), ருக்மணி (கி.பி.14நூ.), சத்யபாமா (கி.பி.14நூ.) ஆகிய 10 படிமங்களும் காட்சிப் பெட்டிகளுக்குள் அழகுற அமைக்கப்பட்டுள்ளன.



படிமக்கூடம்

பழந்தமிழகத்தில் செம்புப் பொருட்கள் வீடுகளிலும் ஆலயங்களிலும் அதிக அளவில் பயன்பாட்டில் இருந்ததோடல்லாமல் இக்காலத்திலும் புழக்கத்தில் இருக்கிறது. சல்லடை (திருவாரூர் கைவிளக்கு (திருவாரூர்), மணி (சேமங்கலம், நாகை), தூபக்கால் (திருச்சி), தொங்கும் விளக்கு (இராமநாதபுரம்), கிண்ணம் (கடலூர்), வால்கரண்டி உட்பட 10 உலோகப் பொருட்கள் காட்சியில் இடம் பெற்றுள்ளன.

**மரச்சிற்பங்கள்**

பொதுவாக மரச்சிற்பங்கள் கோயில் தேர்களையும், அரண்மனை களையும் அலங்கரிக்கப் பயன்படுத்தப்பட்டன. இங்கு பேனல்களில் சீனிவாசர் தேவியருடன், சிங்கம், பத்மநிதி போன்ற தஞ்சாவூர் மற்றும் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்த 9 மரச்சிற்பங்கள் அழகுற அமைக்கப்பட்டுள்ளன. இம்மாவட்டத் திற்குப் பெருமை சேர்க்கும் *"புதுவெளி கோபுரத்தின்"* நேர் மாதிரி ஒன்று காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.



புதுவெளிக் கோபுரம்

# நாணயவியல் பிரிவு

பண்டமாற்று முறை பழந்தமிழகத்தில் பின்பற்றப்பட்டது. கி.மு. 8-ஆம் நூற்றாண்டளவில் நாணயங்கள் நடைமுறைக்கு வந்தன. நாணயங்கள் மூலமாக வரலாறு, காலம், ஆட்சிமுறை, வணிகம், செல்வச் சிறப்பு, தொழில் நுட்பம், கலை, பண்பாடு ஆகியவற்றை அறிய உதவும் அறிவியல் நாணயவியல் (Numismatics) ஆகும்.

நாகப்பட்டினத்தில் வெளிநாட்டு நாணயமாக உரோமப் பொன் நாணயங்கள் கிடைத்துள்ளன. மராத்தியர் காலத்தில் பணம், சக்கரம், வராகன் முதலியன வெளி வந்து நாகப்பட்டினத்தில் புழக்கத்தில் இருந்தன. டச்சுக்காரர்கள் பழவேற்காட்டிலும் நாகப்பட்டினத்திலும் நாணயங்களை அட்சிட்டனர். நாகையில் நாணயசாலை அமைந்த இடம்தான் இன்றும் நாணயக்காரத் தெரு என்று அழைக்கப்படுகிறது. இங்கு பொன், வெள்ளி, செம்பு, ஈயக்காசுகள் அச்சாகி உள்ளன.

வேதாரண்யம், மயிலாடுதுறை, தரங்கம்பாடி போன்ற இடங்களிலிருந்து புதையல் வழி பகோடா மற்றும் தென்னிந்திய பணம், இராசராசசோழர் செப்பு நாணயங்கள், இந்தோ டச்சு நாணயங்கள், இந்தோ பிரஞ்சு நாணயங்கள், இந்தோ டேனிசு நாணயங்கள், கிழக்கிந்தியக் கம்பெனி நாணயங்கள் ஆகியவைப் பெறப்பட்டு சென்னை அரசு அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

நாகப்பட்டினத்தில் நாணயங்கள் அச்சிடப்பட்டுள்ளமை இங்கு கிடைத்த பல்வேறு நாணயங்களிலிருந்து அறியப்படுகிறது. ஆர்க்காடு நவாபுகளின் நாணயங்கள் நாகப்பட்டினத்தில் அச்சிடப்பட்டுள்ளன. மயிலாடுதுறையில் கிடைத்த செப்பு நாணயங்களில் நாகப்பட்டினம் என்ற பெயர் தமிழில் பொறிக்கப்பட்டுள்ளது. டேனிசு கம்பெனியினர் தரங்கம்பாடியிலேயே காசுகளை அச்சிட்டு வெளியிட்டார்கள். இவற்றில் ஒருபுறம் டேனிசு அரசர் பெயரின் முதல் எழுத்தும் மறுபுறம் டேனிசு கிழக்கிந்திய கம்பெனியின் முதல் எழுத்துக்களும் காணப்படுகின்றன.

இங்கு நாகப்பட்டினம் மாவட்டத்தில் கிடைத்த புதைப்பொருட்களின் நிழற்படங்கள், இராசராச சோழர் செப்பு நாணயங்கள், இந்திய நாணயங்களின் உலோக மாதிரிகள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

## கலைப்பிரிவு

இந்தியாவில், ஓவியக்கலை குகைகளில் தொடங்கப்பட்டது. குறிப்பாக மைய இந்தியாவின் மணற்பாறைக் குகைகளில் ஏராளமான ஓவியங்கள் காணப்படுகின்றன. மத்தியபிரதேசம், உத்தரபிரதேசம், ராஜஸ்தான் மற்றும் தென்னிந்தியப் பகுதிகளில் கருங்கல் குகைகளில் வரலாற்றுக்கு முந்தையக் கால ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டு, பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இவ்வித ஓவியங்களில் மிருகங்கள், தாவரப் பூவினங்கள் அடங்கும். மத்தியப் பிரதேசத்தில் பாக் குகைகள், தக்காணத்தில் பாதாமிக் குகைகள், மஹாராஷ்டிராவில் எல்லோரா, தமிழ் நாட்டில் பன மலை, சித்தன்ன வாசல் ஆகிய இடங்களில் சுவரோவியங்கள் காணப்படுகின்றன. எல்லோரா, தஞ்சாவூர், லேபாக்ஷி முதலிய இடங்களில் உள்ள சுவர் ஓவியங்கள் இந்து சமயத்தொடர்பானவை. இலக்கியங்களின் வழி, சுவரோவியங்கள் அன்றி துணி, மரம், பனை ஓலை ஓவியங்களும் பயன்பாட்டில் இருந்தன என்று அறியலாம். பனை ஓலைச் சுவடிகளில் ஓவியங்கள் தீட்டப்படும் பழக்கம் கி.பி. 10–ஆம் நூற்றாண்டில் தொடங்கியது எனலாம்.

மொகாலாயப் பேரரசர்கள் பாரசீக கலையினால் ஈர்க்கப்பட்டு இந்தியாவில் சிற்றோவியங்களை அறிமுகப்படுத்தினர். கி.பி. 13-ம் நூற்றாண்டு வாக்கில் இக்கலை தோன்றியிருந்தாலும் 15-ஆம் நூற்றாண்டில், அக்பர் காலத்தில்தான் இக்கலை பிரபலமடைந்தது. பின்னர், இந்தியாவில் பல்வேறு பகுதிகளுக்கும் இது பரவியது. ராஜபுத்திரம், ராஜஸ்தானி, காங்ரா போன்ற கலைப் பள்ளிகள் இவ்வோவியக் கலையிலிருந்துதான் உருவாகின. இச் சிற்றோவியங்களில் இந்து சமயச் செய்திகள் சித்தரிக்கப்பட்டன. தஞ்சாவூர் ஓவியக்கலை, தஞ்சாவூர் சரபோஜி மன்னரால் உரிய உத்வேகம் கொடுக்கப்பட்டு பராமரிக்கப்பட்டது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் சிற்றோவியக் கலை அவற்றின் தனித் தன்மையை இழந்தது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கிலேய ஓவியர்கள் மற்றும் இராஜா ரவிவர்மா போன்ற இந்திய ஓவியர்கள் ஓவியக் கலையில் ஒரு மறுமலர்ச்சியை உருவாக்கினர். இந்தியாவில் தேசிய அளவில் ஜெமினிராய், நந்தலால் போஸ், எம்.எப். உசைன், கே.சி.எஸ். பணிக்கர் போன்றோர் வளர்கலையில் சிறந்து விளங்கினர்.

## தமிழ் நாட்டில் ஓவியக் கலை

தமிழ் நாட்டில் பனமலை (கி.பி. ஏழாம் நூற்றாண்டு), காஞ்சீபுரம் (கி.பி. ஏழாம் நூற்றாண்டு), சித்தன்ன வாசல் (கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு), தஞ்சாவூர் (கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டு) போன்ற இடங்களில் பழமையான சுவர் ஓவியங்கள் காணப்படுகின்றன. சித்தன்ன வாசல், திருபருத்திக்குன்றம், திருமலை போன்ற இடங்களிலுள்ள ஓவியங்கள் சமண சமயம் சார்ந்தவை. பனமலை, காஞ்சிபுரம், தஞ்சாவூர் போன்ற இடங்களிலுள்ள ஓவியங்கள் இந்து சமயத் தொடர்பானவை.

தமிழ்நாட்டில் ஓவியக் கலை மிகப் பிரபலமாக இருக்கவில்லை. பல்லவர்கள், சோழர்கள் மற்றும் பாண்டியர்கள் ஓவியங்களைக் காட்டிலும்சிற்பங்களை விரும்பினர். சிற்பங்கள் மீது வர்ணங்கள் தீட்டப்பட்டன. தஞ்சாவூர் பெரிய கோவில் சோழர்களின் ஓவியத்தின் மீது இருந்த நாயக்கர்கால ஓவியம் பிரித்தெடுக்கப்பட்டு தனிப் பலகையில் பாதுகாக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளன. தஞ்சாவூர் பலகை ஓவியம் ஒரு மறுமலர்ச்சி ஓவியமாகும். தமிழ் நாட்டில் கே.சி.எஸ். பணிக்கர், பி.எல். நரசிம்மமூர்த்தி, எஸ். தனபால், எல். முனுசாமி போன்ற ஓவியர்கள் தமிழ்நாட்டில் தங்களுடைய படைப்பால் பெருமைப்பட்டுள்ளனர்.



ஓவியக்கூடம்

தமிழ்நாட்டில் சென்னையிலுள்ள அரசு கலை மற்றும் கைத்தொழில் கல்லூரி மற்றும் கும்பகோணம் அரசு கலை மற்றும் கைத்தொழில் கல்லூரி நூற்றுக் கணக்கான ஓவியக் கலைஞர்களை உருவாக்கி வருகிறது. மாவட்டங்கள் தோறும் கலை விழாக்கள் நடத்தப்பட்டு சிறந்த, நலிந்த, கலைஞர்கள் அடையாளம் கண்டு கொள்ளப்பட்டு, ஊக்குவிக்கப்படுகின்றனர். நாகப்பட்டினம் அரசு அருங்காட்சியகத்தில் பசுமைக்குளம் (எ.பி. சந்தானராஜ்), பெரியகுளம் (எ.பி. சார்லஸ் ராஜ்), உணவு ஊட்டுதல் (எம். பாலசுப்ரமணியம்), அரை வட்டமும் முக்கோணமும் (பி. சீனிவாசன்), மாயை (டி. விஸ்வநாதன்), இயற்கை (திருமதி. லீலா கணபதி), மனித உண்ணி (டி. வெங்கடபதி) மற்றும் பி. மாணிக்கம், பாகவான் சவான் போன்றோர் தீட்டிய எண்ணெய் வண்ண ஓவியங்கள் இடம் பெற்றுள்ளன.

நாகப்பட்டினம் மாவட்டத்தில் கலைத்துறையில் தமது பெரும்பங்கை நல்கியவர்களில் நாகப்பட்டினம் திரு. பி. கங்காதராச்சாரி, பூம்புகார் திரு. பி. கிருஷ்ணமூர்த்தி, சீர்காழி திரு. தி. ஆனந்த் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

## மானிடவியல் பிரிவு

மனிதனைப் பற்றிய அறிவியல் மானிடவியல் என்று அழைக்கப் படுகிறது. அந்த மானிடவியலில் உடற் கூறு மானிடவியல் மற்றும் சமூக மானிடவியல் என்ற இரண்டு பிரிவுகள் உண்டு. மனிதக் கூறுகளைக் கொண்டு மனித இனம் வகைப்படுத்தப்பட்டுள்ளது. இடம், தட்பவெப்பம், போன்றவற்றைக் கொண்டு மனிதனின் உடற்கூறுகள் மாறுகின்றன. மனிதனின் கூட்ட அமைப்பைக் கொண்டு கலை, பண்பாடு போன்றவற்றில் வேறுபாடுகள் காணப்படுகின்றன.

ஆதி மனிதன் குகைகளில் வாழ்ந்து மலைகளில் கிடைத்த காய், கனிகளையும், கிழங்குகளையும் சாப்பிட்டு வந்தான்; வேட்டையாடி மாமிசத்தையும் உண்டான். காலப்போக்கில், மலைச் சரிவுகளில் விவசாயம்

செய்து அதிலிருந்து கிடைக்கும் பொருட்களை உணவாக்கிக் கொண்டான். இன்றும் மலைப்பகுதிகளில் மலையாளி பழங்குடி மக்கள் பல்வேறு மாவட்டங்களில் காணப்படுகின்றனர். பெரிய மலையாளிகள், கொல்லி மலையாளிகள் மற்றும் பச்சை மலையாளிகள் ஆகியோர் தேன் சேகரித்தல், விலங்குகளை மேய்த்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களைச் செய்து வருகின்றனர். கல்வராயன் மலைப் பகுதிகளில் வாழும் மலையாளிகளின் மூங்கில் சீப்பு, சுரைக்காய் பாத்திரம், மூங்கில் பாத்திரம், மண் தோண்டும் கருவி, வில், அம்பு, வெட்டுக் கத்தி போன்றவை காட்சியில் அமைக்கப்பட்டுள்ளன.

பொம்மலாட்டக் கலை உலகின் பல்வேறு பகுதிகளில் நடைமுறையில் செயலாற்றப்பட்டு இன்று அழியும் நிலையில் உள்ளது. இரவு நேரங்களில் வெள்ளைத் திரையில் தோல் பொம்மைகள் கொண்டு கூத்துக்கள் நடத்தப்பட்டு வந்தன. அவ்வாறு பயன்படுத்தப்பட்ட தோல் பொம்மைகள் இங்கு காட்சிப்படுத்தப் பட்டுள்ளன. ஆதி மனிதன், வேட்டையாடு வதற்கும், உணவைச் சேகரிப்பதற்கும் கற்கருவிகளைப் பயன்படுத்தினான். பல வகையான கற்கருவிகள் ஆற்றுப்படுகை களிலும், மலைச் சரிவுகளிலும் கிடைக் கின்றன. இவை சுமார் கி.மு. 1,25,000ற் கும் கி.மு. 40,000ற்கும் இடைப்பட்ட காலத்தைச் சார்ந்தவை. பழைய கற்காலக் கருவிகள் கரடு முரடாகவும், புதிய கற்காலக் கருவிகள் வழவழப்பாகவும் இருக்கும். இங்கு செங்கற்பட்டு மாவட்டம், அத்திரம்பாக்கத்திலுள்ள கொற்றலை ஆற்றுப் பகுதியிலிருந்து சேகரிக்கப்பட்ட பழைய கற்காலக் கருவிகள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.


தோல் பாவைகள்

சமூக வாழ்வியலில் இசை தனியிடத்தை பெற்றிருந்தது. சமூகக் கூட்டங்களில், விழாக்களில் இசை பெரும் பங்காற்றியது. இங்கு பஜனைத் தம்புரா, வேத வீணை, செங்கோட்டு யாழ் ஆகியவை காட்சியில் வைக்கப் பட்டுள்ளன.


இசைக் கருவிகள்

# இயற்கையியல் பிரிவு

இயற்கையின் கூறுகள் மனிதனின் சிற்றாற்றலுக்கு அப்பாற்பட்டது. அமீபா போன்ற மிகச் சிறிய பிராணி முதல் திமிங்கலம் போன்ற மிகப் பெரிய விலங்குகள், பூஞ்சக் காளான் முதல் மிகப் பெரிய மரங்களும் நம் கண் முன்னே இருக்கின்றன. நாம் தங்கும் பூமியில் பல தரப்பட்ட தாதுக்கள், உப்புக்கள், கற்கள், உலோகங்கள், பல்வேறு நிலைகளில் காணப்படுகின்றன. இவற்றை பற்றிய அறிவியலே இயற்கையியலாகும். புவியியல், தாவரவியல், விலங்கியல் இதில் அடங்கும்.

# புவியியல் பிரிவு

கி.பி. 10–ஆம் நூற்றாண்டிலேயே நாகையில் இயற்கை எரிவாயு உள்ளமை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. காவிரி கழிமுகப் பகுதியில் 1963–ஆம் ஆண்டிலேயே எண்ணெய் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. இம்மாவட்டம் எரிவாயு வழங்குவதில் முதலிடம் பெற்றுள்ளது.

மனிதன் மற்றும் விலங்கினங்களின் பரிணாம வளர்ச்சியைப் பார்க்கும் போது தாவரம் மற்றும்விலங்கினங்கள் காலத்தால் மாற்றமடைந்து வருவதைக் காண முடிகிறது. மரங்கள், விலங்கினங்கள் வாழ்ந்து, அழிந்து, பூமியில் புதையுண்டு பல இலட்சக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னர் அவை புதை படிவங்களாக நமக்கு இன்று கிடைக்கின்றன. இராட்சத விலங்கினங்கள் பல அருங்காட்சியகங்களில் மாதிரிகளாக வைக்கப்பட்டு இருப்பதைக் காண்கிறோம். இவ்வருங் காட்சியகத்தில் கல்லாகிய மரம், குதிரையின் பரிணாம வளர்ச்சி, சிப்பிகளின் புதை படிவங்கள் மற்றும் ஜுராசிக் புதை படிவங்கள் காட்சியில் வைக்கப் பட்டுள்ளன. அற்றுப்போன இராட்சத மிருகங்களின் மாதிரிகள் காட்சிப் பெட்டி யில் வைக்கப்பட்டுள்ளன.



இராட்சத விலங்குகினங்கள் காட்சிப் பெட்டி

இவை தவிர கனிம வளத்தை பொது மக்களுக்கு காண்பிக்கும் வண்ணம் பாக்ஸைட், கிராபைட், மாக்னசைட் போன்ற கனிமங்களும் பலவிதமான வண்ணக்கற்களும் காட்சியில் இடம் பெற்றுள்ளன.

## விலங்கியல் பிரிவு

பூச்சிகள், பறவைகள், விலங்கினங்கள், மாவினம் (Fauna) ஆகும். இவற்றை முதுகு நாணற்றவை, முதுகு நாணுள்ளவை என இரு வகைகளாக பிரிக்கலாம். உலகம் முழுவதும் நிரம்பிக் காணப்படும் பூச்சிகள் முதுகு நாணற்றவை எனும் தொகுதியைச் சார்ந்தவை ஆகும். அவற்றின் உடலை, தலை, மார்பு, வயிறு என மூன்று பிரிவுகளாக பிரிக்கலாம். அவற்றின் வளர்ச்சியானது உருமாற்றம் மூலம் நடைபெறுகிறது. உருமாற்றத்தின் போது முட்டை, புழு, கூட்டுப்புழு, முதிர்ந்த பூச்சி என நான்கு நிலைகளைக் கடக்க வேண்டி உள்ளது. உணவு வாணிபப் பயிர்கள் மற்றும் மனிதர்களுக்குத் தீங்கை உண்டாக்கும் பூச்சிகளைத் தீங்கு செய்யும் பூச்சிகள் எனவும் அயல் மகரந்தச் சேர்க்கை, தேன், மெழுகு, அரக்கு போன்றவற்றைத் தரும் பூச்சிகளைப் பயன் தரும் பூச்சிகள் என இருவகைகளாகப் பிரிக்கலாம்.

வண்ணத்துப் பூச்சிகள், அந்துப் பூச்சிகள், இலைப் பூச்சிகள், வண்டுகள் போன்ற பூச்சி இனங்கள் இங்கு காட்சியில் உள்ளன.

கடல்களில் ஆயிரக்கணக்கான விலங்கினங்கள் வாழ்கின்றன. சங்கு இவ்விதமான விலங்கினங்களில் ஒன்று. பழங்காலந்தொட்டே சில இனச் சிப்பிகளிலிருந்து முத்துக்கள் பெறப்படுகின்றன. சங்குகளிலிருந்து வளையல்கள், மோதிரங்கள், காப்புகள், காதணிகள், கழுத்தணிகள் போன்ற ஆபரணங்கள் தயாரித்து பயன்படுத்தப்பட்டன. சிப்பிகளில் “கால்சியம் கார்பனேட்” இருப்பதால் சுண்ணாம்பு மற்றும் உரங்கள் தயாரிப்பதிலும் இவைகள் பயன்படுத்தப்படுகின்றன. இங்கு சிபியம், டோனா, பெக்டன், மியூரெக்ஸ், டரிடெல்லா போன்ற சிப்பிகள், இங்கு காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.


சிப்பிகள்

கடற் பஞ்சுகள், பவளங்கள், மீன்கள் போன்ற பொருளாதாரச் சிறப்பு பெற்ற உயிரினங்கள் கடலில் வாழ்கின்றன. மீன்கள் உணவு பொருட்களாகவும் பவளப் பாறைகள் உயிரினங்கள் வாழும் இடமாகவும் இருப்பதால் விலங்கின ஆய்விற்கு உதவுகின்றன. கடற்பஞ்சுகள், மீன்கள், மாட்டு மீன், கடற்குதிரை போன்றவை, அவை வாழும் சூழலுடன் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

## தாவரவியல் பிரிவு

தாவரங்கள் காணா இடம் இல்லை எனலாம். தாவரங்கள் மனித வாழ்வில் மிகச் சிறந்த இடத்தை பிடித்துள்ளது. தாவரங்கள் மற்றும் அவற்றின் பகுதிகள் உணவாகவும், உறையுள் அமைக்கவும், மருந்தாகவும் மேலும் பல்வேறு வகையில் பயன்படும் பொருளாகவும் அமைகின்றன. தாவரங்களின் சிறப்பு தன்மையை பொது மக்கள் எளிதில் அறிந்து கொள்ளும் வகையில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

தாவரங்களின் திசுக்களில் உள்ள சில வேதியியப் பொருட்கள் அந்தந்த தாவரத்தின் மருத்துவப் பயனுக்கு அடிப்படையாக அமைகின்றன. தாவரங்களின் தண்டு, வேர், பட்டை, விதைகள், பழங்கள் ஆகிய பகுதிகளிலிருந்து மருந்து தயாரிக்கப்படுகின்றன. இவை பெருமளவில் இன்று பயன்பாட்டில் உள்ளன.

சர்ப்பகந்தி, செம்பருத்தி, நன்னாரி, கருந்தேள் கொடுக்கு, நெருஞ்சி, கண்டங்கத்தா, நாய்வேளை, தூதுவளை, எட்டி, மகிழம்பூ போன்ற மருத்துவத் தாவரங்கள் காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

மரங்கள் சுற்றுப் புறத்தூய்மை கெடாமல் காக்கின்றன. காடுகளை அழிப்பது சுற்றுப் புறத்தூய்மையைக் கெடுக்கும். எனினும், இயற்கை சீற்றத்தால் அழியும் மரங்கள் பல்வேறு வகைகளில் உதவுகின்றன. காகிதம், தீக்குச்சி, மரப்பேழை, மரப்பெட்டிகள், இசைக் கருவிகள், தளவாடங்கள் தயாரிப்பதில் பல்வேறு மரங்கள் பயன்படுத்தப்படுகின்றன. இங்கு தேற்றான்கொட்டை, இலைக் கள்ளி, சரக்கொன்றை, எட்டி, காட்டு மாமரம், கொக்கு, மந்தாரை, சிலந்தி, சில் ஓடை, கருங்காலி, காட்டு செங்கொட்டை, தூங்குமூஞ்சி ஆகிய மரங்களின் பகுதிகள் காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

வட இந்தியாவில் இமயமலைப் பகுதிகளில் வளரும் போஜ் மரத்திலிருந்து எடுக்கப்படும் போஜ் பத்தர் எனப்படும் மரப்படைகள் முற்காலங்களில் எழுதுவதற்கு பயன்படுத்தப்பட்டன. இங்கு போஜ்பத்தர் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.


உலர் தாவரங்கள்

மாணவ, மாணவியர் தாவரத்தின் பகுதிகளை இனம் கண்டு கொள்ளும் வண்ணம் உலர் தாவரங்கள் 20 காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

சித்த மருத்துவத்தில் பயன் படுத்தப்படும் நவலோகம், நவ பாஷாணம், நவ உப்பின் மருத்துவ பயன்களும் தாவர உலகின் விந்தை மிகு தாவரங்களின் நிழற்படங்களும் தமிழ்நாட்டின் பூச் சின்னமாகத் திகழும் கலப்பைக் கிழங்கு எனப்படும் *"செங்காந்தள்"* பூவும் தாவரவியலின் சிறப்பை விளக்கிட இங்கு காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

உயிரினங்களின் பாதுகாக்கப்பட்ட சில பகுதிகள் ரெஸினால் பாதுகாக்கப்பட்டு காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

# சிறுவர் பகுதி

வளர்ந்து வரும் சூழலில் அறிவியல் மற்றும் தொழில் நுட்பம் அருங்காட்சியகத்துடன் மிகுந்த நெருக்கம் கொண்டுள்ளன. படித்தும் பார்த்தும் கற்றுக் கொள்வதை விட செயல்பாடு மூலம் கற்றுக் கொள்வதே சிறந்தது என நாம் அறிவோம். இதனை வலியுறுத்த மின் சக்தியில் இயங்கும் மூன்று செயல்பாட்டு காட்சிப்பெட்டிகள் இவ்வருங்காட்சியகத்தில் செயல்படுத்தப்பட்டுள்ளன. இவை பறவைகளின் இடப்பெயர்ச்சி, பறவைகள், விலங்குகள் பற்றிய தகவல்களைத் தருகின்றன.

# வேதியியப் பாதுகாப்புப் பிரிவு

அருங்காட்சியகங்களுக்கு வரும் அரும்பொருட்கள் அத்தனையும் காட்சியில் அமைக்கக் கூடிய அளவில் பெறப்படமாட்டாது. அவற்றை பல்வேறு அறிவியல் சார்ந்த முறைகளில் ஆய்வு செய்து தூய்மைப்படுத்தி பாதுகாத்த பின்னரே காட்சிப்படுத்தப்படுகின்றன. இப்பாதுகாப்பை இரு வகைப்படுத்தலாம். ஒன்று முன் எச்சரிக்கை பாதுகாப்பு மற்றொன்று குறுக்கீட்டுப் பாதுகாப்பு.

### முன் எச்சரிக்கை பாதுகாப்பு

பொது மக்களாலும், பார்வையாளர்களாலும் அருங்காட்சியகப் பணியாளர்களாலும் எவ்வித சிரமுமின்றி செயல்படுத்தலாம். பொருட்களைத் தொடாமல் பார்ப்பதும் கவனமாகக் கையாள்வதும் தூய்மையாக வைத்து இருப்பதும் பூச்சிகள் தாக்காது வைத்திருப்பதற்குப் போதிய பூச்சி விரட்டிகளைப் பயன்படுத்துவதும் முன் எச்சரிக்கை நடவடிக்கை ஆகும்.

பாதிக்கப்பட்ட பின் அவை கண்டிப்பாக குறுக்கிட்டு பாதுகாப்பின்படி பாதுகாக்க வேண்டும். பல்வேறு முறைகளில் பல்வேறு வேதியியப் பொருட்களின் உதவியுடன் அருங்காட்சியகப் பொருட்கள் பாதுகாக்கப் படுகின்றன.

### படிமங்கள் பாதுகாப்பு

படிமங்கள் மீது மண்ணுடன் கலந்த வேதிய உப்புக்கள் கட்டியாகி சிற்பங்களில் மேல் உள்ள அமைப்புகளை மறைத்து நிற்கும். இவற்றை மிகக் கவனமாகப் பலத்தரப்பட்டக் கருவிகளின் உதவியால் எடுத்து,

படிந்துள்ள உப்புக்கள் மேலும் சிற்பங்களைப் பாதிக்காமல் இருக்க ஆல்கஹாலில் கலந்த 2 விழுக்காடு பென்சோ-ட்ரை-அசோல் பூசி பாதுகாக்கலாம். இம்முறை புகைப்படங்களில் வழி காண்பிக்கப்பட்டுள்ளது.

செப்பு மற்றும் வெள்ளி நாணயங்கள் ஒரு கண்ணாடி முகவையில் உள்ள 5 விழுக்காடு சோடியம் கார்பனேட் கரைசலில் நேர் மின்வாயாக வைத்தும் நாணயத்தைத் தொடாத இரும்பு சல்லடையை எதிர்மின்வாயாக வைத்தும் ஒரு சில மணி நேரங்கள் நேர் மின்சாரம் பாய்ச்சினால் செம்பு மற்றும் வெள்ளி நாணயங்கள் மேல் படிந்துள்ள உப்புகள் அழிகின்றன. தேய்த்துத் தூய்மை செய்தால் உண்மை நிலை தோன்றும். இவ்விதம் பாதுகாக்கப்பட்ட நாணயங்களின் முன்னும் பின்னும் நிழற்படங்கள் வைக்கப்பட்டுள்ளன. தஞ்சாவூர் பலகை ஓவியம் பாதிக்கப்பட்ட நிலையிலும், பாதுகாக்கப்பட்ட நிலையிலும் புகைப் படங்களாகக் காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

# செயல்பாடுகள்

நாகப்பட்டினம் அருங்காட்சியகம் ஒரு சிறந்த கல்வி நிறுவனமாக செயல்படுகிறது. பள்ளி, கல்லூரி மாணவ மாணவியருக்குக் காட்சிக் கூடங்கள் விளக்கி காண்பிக்கப்படும். திங்கள் தோறும் குறிப்பிட்ட சிறப்பு தலைப்புகளில் திங்கள் சொற்பொழிவுகள் நடைபெறும். புதியதாக சேகரிக்கப்பட்ட அரும்பொருட்கள் புதிய சேகரிப்பு சிறப்பு கண்காட்சியில் வைக்கப்படும். போட்டிகள், கருத்தரங்குகள், பணிப் பட்டறைகள் நடத்தப்படும். ஆண்டுதோறும் அருங்காட்சியக வார விழாக்கள் நடத்தப்படும்.

பொது மக்கள் அரும்பொருட்கள், கல்வெட்டுக்கள், ஓலைச் சுவடிகள், ஓவியங்கள், நாணயங்கள், ஆயுதங்கள் போன்ற பழங்கால பொருட்கள் இருப்பின் அவற்றை அருங்காட்சியகத்திற்கு வழங்கி, அப்பொருட்களை மக்கள் யாவரும் கண்டு களிக்க உதவிடவும் அருங்காட்சியகத்தைப் பற்றி பலருக்குத் தெரிவிக்கவும் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

# துணை நூல்கள்


1. தமிழக வரலாற்றுச் சின்னங்கள், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை வெளியீடு, 1989.
2. கோவை இளஞ்சேரன், நாகபட்டினம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1996.
3. Ramachandran, T.N., The Nagapattinam and other Buddhist Bronzes in the Madras Museum, Bulletin of the Madras Government Museum, Chennai, revised, 1992.
4. B.S. Baliga, Tanjore District Handbook, Madras, 1957.
5. Jeyaraj V., A Technical Study on the Coins of Arcot Nawabs, Report, Sept. 1996.
6. Epigraphia Indica Vol XXII PP 241-54 Pl.276.
7. Poompuhar, Department of Tourism, Chennai, 1998.